# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 8 | இதழ் 8 | பிப்ரவரி 10, 2022 | வருடச்சந்தா ரூ 100/- Volume : 8 | Issue 8 | February 10th, 2022 | Annual Subscription Rs. 100/-



## அகம்-புறம்

# வாழும் ஞானி ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்

# 3 நாள் ஞான முகாம்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நேரடி ஞான முகாம், **சேலம் ஸ்ரீ பகவத் பவனில்** நடைபெற உள்ளது.

நாள் : **25-2-22** காலை **9.00** மணி முதல் **27-2-22** மதியம் **3.00** மணி வரை

இடம் : **சேலம், ஸ்ரீபகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பைக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po), சேலம்.



செலவு பகிர்வு : ரூ. 5000/- நபருக்கு

**ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் முதல் நாள் 24–2–22 வியாழக்கிழமை மாலைக்குள் வந்து சேர வேண்டுகிறோம்.**

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் குழந்தைகளையும் மற்றவர்களையும் அழைத்து வருவதை கட்டாயம் தவிர்க்க வேண்டுகிறோம்.

ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியாக தங்கும் வசதி உள்ளது.

ஞானமுகாமில் 75 அன்பர்கள் மட்டுமே கலந்துகொள்ள முடியும். எனவே 15-2-22 ஆம் தேதிக்குள் அவசியம் முன் பதிவு செய்ய வேண்டுகிறோம்.

**முன் பதிவுக்கு**

கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை, ஆதார் Xerox Copy உடன் February Gnana Muhaam என Type செய்து Whatsapp அனுப்ப வேண்டிய எண் : **9942219065**

**வழித் தடம் :** Google Map-ல் Sri Bagavath Bhavan என Search செய்தால் Route Map கிடைத்து விடும். சேலம் ஜங்சன் இரயில் நிலையம் – புதிய பேருந்து நிலையம் – ஆத்தூர் வழி அயோத்தியாபட்டிணம் பஸ் ஸ்டாப் -பெரியகவுண்டாபுரம் செல்ல மினி பஸ் (அ) ஆட்டோ கிடைக்கும்.)

பெரிய கவுண்டாபுரம் – (கொடம்பக்காடு) ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரம்.



தனி அறை வேண்டுபவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கவும்.

(i) Single Bed Room – 8 மட்டும் உள்ளது.

(ii) Double Bed Room - 8 மட்டும் உள்ளது.

இதற்கு தனிக் கட்டணம் செலுத்த வேண்டுகிறோம். ஒரு அறையில் இணைந்து தங்குபவர்கள் இந்த கட்டணத்தை பகிர்ந்து (Sharing) கொள்ளலாம்.

குறைந்த எண்ணிக்கையில் இருப்பதால் முன் பதிவு அவசியம். தொடர்புக்கு : **7904118421**

அன்புடன், **ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-636003.
**9994205880, 9789165555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

V.A.P. SHARAVANAN - 99942 05880
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


## FORM IV


| | | |
|---|---|---|
| Place of Publication | : | Salem |
| Periodicity of its publication | : | Monthly |
| Printer's Name | : | R. Jayavel |
| Nationality | : | Indian |
| Address | : | Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapet, Salem - 636003. |
| Publisher's Name | : | V.A.P. Sharavanan |
| Nationality | : | Indian |
| Address | : | 28, Rmalinga Samy Street, Ammapet, Salem-636003. |
| Editor's Name | : | K.S. Jeevamani |
| Nationality | : | Indian |
| Address | : | 31, Ramalinga Samy Street, Ammapet, Salem-636003. |
| Names and address of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital. | : | Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636003. |

I V.A.P. SHARAVANAN, Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-3 hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date : 10.02.2022 V.A.P. Sharavanan





- ஸ்ரீ பகவத்

# பகவத் ஐயா அவர்களின் ஞானமுகாம் இரண்டாவது அமர்வு. அகம் – புறம்

அகத்தைப் பொருத்த அளவில், நாம் எந்தவிதமான மனோ–அனுபவ நிலையையும் தக்கவைக்கத் தேவையில்லை. அதை இயற்கையாக விட்டுவிட்டால் போதும். அதுவே விடுதலை அடைந்து விடுகிறது. அதனால் நாம் நமது மனதை வடிவமைக்கத் தேவையில்லை. அதனை சுதந்திரமாக விட்டுவிட்டால் போதும். அகத்தைப் பொருத்த அளவில் நாம் பொறுப்பை எடுப்பதுதான் தவறு. அது எப்படி வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும் என்று விட்டு விட்டால், அது தன்னைத் தானே சரி செய்து கொள்ளும்.

நாம் நினைக்கிறோம், அது மோசமாக இருக்கிறதே என்று. மோசமாக இருப்பதும்கூட அதுவாகவே சரியாகிவிடும்.

ஆனால் புறத்தில் நமக்குப் பல வேலைகள் உண்டு. நாம் குடும்பத்தில் தலைவராக இருக்கிறோம். வேலையைப் பொருத்தும், ஏதாவது பதவியில் இருக்கிறோம்.

இந்நிலையில் அந்த வேலைகளையெல்லாம் நாம் பொறுப்பாகச் செய்ய வேண்டும். அதை ஏனோ தானோ என்று நாம் செய்ய முடியாது. எப்படி வேண்டுமானாலும் இருந்து விட்டுப் போகட்டும் என்று அதனை விட்டு விட முடியாது.

அங்கு செய்ய வேண்டிய வேலைகளை நாம் சரியாகச் செய்ய வேண்டும்.

அகம் வேறு, புறம் வேறு. புறம் என்றாலே ஒரு ஒழுங்கு உண்டு. செய்ய வேண்டியது–செய்ய வேண்டாதது என பிரிவுகள் உண்டு. அகத்தைப் பொருத்த அளவில் நல்லது கெட்டது என எதுவுமில்லை; உயர்ந்தது தாழ்ந்தது என எதுவும் பார்க்க வேண்டியதில்லை.

எல்லாம் இயற்கை என்று விட்டுவிட்டால் போதும்.

புறம் என்று வரும்போது நாம் என்ன வேலை செய்கிறோமோ அந்த வேலைக்கு உறுதுணையாக இருப்பதுதான் சரியானதாகும்.

பொதுவாக ஆன்மிகம் என்றாலே அது அகம் சார்ந்தது மட்டும்தான். எனவே அகத்தைப் பொருத்த அளவில் எதுவும் தேவை இல்லை என முடித்துக் கொண்டால் போதும்.

அதன் பிறகு ஆன்மிகம் என்ற ஒன்றே கிடையாது.

அப்படிப் புரிந்து கொண்டால் அதுவே விடுதலை ஆகி விடும். அதற்குப் பிறகு ஆன்மிகம் நம்மைப் பின்தொடர்ந்து வரும். நாம் அதனைப் பின்தொடர்ந்து செல்ல வேண்டியதில்லை.

ஆன்மிகம் என்றாலே நிறைய துறவிகள் உள்ளனர். புத்தரை எடுத்துக்கொண்டால் அவர் அரச பதவியைத் துறந்து துறவறத்திற்குதான் சென்றார். மேலும் அவர் தன்னுடைய மகனையும் துறவறத்திற்கு அழைத்ததாகச் செய்தி உண்டு.

ஆன்மிகம் என்பது ஏதோ ஒன்றை அடைய வேண்டிய உயர்ந்த நிலை என்றும்,

அதை அடைந்த பிறகு நமக்கு உலகமே துச்சம் தான் என்றும்,

உலகம் எப்படி வேண்டுமானாலும் இருந்து விட்டுப் போகட்டும் என்றும்,

உலகத்தை நாம் நிர்வாகம் செய்ய வேண்டிய அவசியமில்லை என்றும் எல்லோரும் ஒரு முடிவுக்கு வந்துவிடுகிறார்கள்.

ஆனால் உண்மை என்னவென்றால் ஆன்மிகம் என்பது ஒரு நுழைவாயில்தான். மனோவியலாக எடுத்துக் கொள்ளும் போது, நம்முடைய மனம் நன்றாக இருந்தால்தான் நமது செயல்களும் நன்றாக இருக்கும்.

ஆன்மிகம் என்பது மனோவியல் சம்பந்தப்பட்டதுதான். மனதிற்கு ஓகே கொடுத்து விட்டால் மனம் நன்றாக ஆகிவிடுகிறது. இதில் நாம் தேர்ச்சி அடைந்து விட்டால் இத்தோடு நம்முடைய வாழ்க்கை முடிந்து விடுவதில்லை. அதற்குப் பிறகுதான் உண்மையான வாழ்க்கை ஆரம்பமாகிறது. ஆன்மிகம் என்பது நம்மை மகிழ்ச்சியாக

வைத்திருப்பது மட்டும் அல்ல. ஆன்மிகம் நம்முடைய செயல்களோடு இணைந்து கொள்ளவேண்டும். எல்லாவற்றிலும் அப்படி ஈடுபட்டால் உண்மையிலேயே உலகமே சுபிட்சமாக இருக்கும். நாம் செய்ய வேண்டிய செயல்கள் சிறப்பாக இருக்கும்.

அகத்தைப் பொருத்த அளவில் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை என்று நமது அறிவு ஒரு முடிவுக்கு வந்துவிடுகிறது. ஆனாலும் நாம் நமது செயல்களில் ஈடுபடும் போது அந்தச் செயல்களின் தன்மைக்குத் தகுந்த மாதிரி அந்தச் செயல்களின் தாக்கம் நம்முடைய மனதில் எதிரொலிக்கவே செய்யும்.

அப்பொழுது நமக்கு சிலவற்றைச் செய்ய வேண்டுமா அல்லது செய்ய வேண்டாமா என்ற குழப்பம் ஏற்படலாம். நமக்கு அது ஆபத்தை ஏற்படுத்திவிடுமோ என்றும் தோன்றலாம். அந்தச் சூழ்நிலையில் நாம் அதை நிராகரிக்கவும் முடியாது.

அதனால் புறச் செயல்கள் நம் மனதை ஆக்கிரமித்து ஒரு தேவையில்லாத உணர்ச்சியை அது ஏற்படுத்திவிடும்.

அகம் ஓகே என்றால் எல்லாம் ஓகே ஆகிவிடும். ஆனால் அகம் ஓகே ஆகாதபடி புறச் செயல்கள் நம்மை ஆக்கிரமித்துவிடும்.

எனவே புறச் செயல்களை நாம் எப்படி அணுகுவது எனவும் நாம் சில வழிமுறைகளை ஏற்படுத்தி வைத்துள்ளோம்.

நாம் சில செயல்களைச் செய்ய முற்படும் போது, அதை நாம் செய்வோம் என கொஞ்ச நேரம் நம் மனம் சொல்லும். பிறகு கொஞ்ச நேரம் கழித்து அதைச் செய்ய வேண்டாம் என்றும் அந்த மனதே சொல்லும்.

இம்மாதிரி அலைபாய்ந்து கொண்டு இருக்கும் போது அங்கு செயல் சரியாக நடக்காது. அது தேவையில்லாத மன உளைச்சலைத்தான் கொடுக்கும்.

எனவே சில செயல்களை நாம் தரம் பிரித்துக் கொள்ள வேண்டும். செய்ய வேண்டிய செயல் என்று ஒரு முடிவுக்கு வந்துவிட வேண்டும். அந்த முடிவு எடுத்தாலும் செயல் நிறைவேறுவதற்கு தாமதமாகலாம். இருந்தாலும் நாம் எடுத்த முடிவு தெளிவாக இருக்கவேண்டும். சிலவற்றில் நாம் செய்யக்கூடாத செயல் என்றும் இருக்கும். அதிலும் தெளிவான முடிவு எடுக்க வேண்டும்.

அதன் பிறகு செய்வோமா வேண்டாமா என்ற குழப்பம் எதுவும் இல்லாமல் நாம் ஒரு முடிவுக்கு வந்துவிட வேண்டும்.

பொதுவாக முடிவெடுப்பதில் மூன்று விதமான நிலைப்பாடுகள் உண்டு.

**செய்ய வேண்டிய** செயல்கள், **செய்யக்கூடாத** செயல்கள், **தள்ளிப்போட வேண்டிய** செயல்கள்.

இம்மாதிரி மூன்றுவிதமாக முடிவெடுக்கும் போது, அது அகத்தில் எவ்விதத் தடுமாற்றத்தையும் ஏற்படுத்தாமல் இருக்க உதவி செய்யும்.

செய்ய வேண்டிய செயல் என்று முடிவு செய்தபிறகு அதற்கு எதிரான சிந்தனைகளைத் தவிர்த்து விடவேண்டும்.

அதுபோல் செய்ய வேண்டாம் என முடிவு செய்தபிறகு அதற்கு எதிரான சிந்தனைகளையும் தவிர்த்து விடவேண்டும்.

அதுபோல் தள்ளிப் போட வேண்டும் என்று முடிவு செய்தபிறகு அதற்கு எதிரான சிந்தனைகளையும் தவிர்த்து விடவேண்டும்.

அடுத்ததாக இன்னும் ஓர் அணுகுமுறை உள்ளது.

இதன்படி, நம் மனதின் செயல்பாடுகளை, **Conscious Mind** (உணர்மனம்) மற்றும் **Total Mind** (முழு மனம்) என இரண்டாகப் பிரித்துள்ளோம்.

உதாரணமாக மனதினுடைய செயல்பாடுகளைப் பொருத்த அளவில், மனதிற்கு நான்கு விதமான தன்மைகள் உண்டு என சாஸ்திரங்கள் கூறுகின்றன.

அதாவது நம்முடைய மொத்த மனதையும் சேர்த்து சாஸ்திரம் அந்தக்கரணம் என்று பெயரிட்டுள்ளது. மனம் என்று கூறுவதில்லை.

அந்தக் கரணத்தின் முதல் பகுதி தான் மனம் ஆகும்.

இருந்தாலும் பேச்சுவழக்கில் மொத்த அந்தக் காரணத்தையும் மனம் என்கிறோம்.

அந்தக்கரணம் என்பது, **மனம், புத்தி, சித்தம், அகங்காரம்** என நான்கு பகுதிகளால் ஆனது.

உதாரணமாக நாம் ஒரு அரசு ஊழியர் என வைத்துக்கொள்வோம். ஆறு நாட்கள் விடுமுறை வருகிறது. "இந்த விடுமுறையில் ஊட்டி கொடைக்கானல் சுற்றுலா செல்லலாம், வீட்டில் இருக்கும் வேலைகளைப் பார்க்கலாம், கிராமத்தில் இருக்கும் நமது சொந்த வீட்டிற்குச் செல்லலாம்" – இப்படி மனது பல்வேறு ஆலோசனைகளை வழங்கும்.

இதில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுப்பதுதான் புத்தி. புத்திதான் எதை செய்யலாம் என்று முடிவு செய்கிறது.

புத்தி என்ன முடிவு செய்ததோ அதை

அங்கீகரித்து சித்தம் அதற்குரிய ஆற்றலைக் கொடுக்கும்.

உதாரணமாக நாம் ஒரு ரோட்டில் நடந்து சென்று கொண்டிருக்கிறோம் என்று வைத்துக்கொள்வோம். தொலைவில் 500 மீட்டருக்கு அப்பால் கும்பலாக மனிதர்கள் கூடியிருக்கிறார்கள். ”ஏன் கூடியிருக்கிறார்கள்? பக்கத்தில் சென்று பார்ப்போமே”– என்று நம் மனது கூறுகிறது. அதே மனம், ”கூடி இருப்பவர்களைப் பார்த்தால் நல்லவர்களாகத் தெரியவில்லையே. பிரச்சனைக்கு உரியவர்கள் போன்று தெரிகிறதே. தேவையில்லாத வம்பு வைத்துக் கொள்ள வேண்டாம். விலகி வேறு எங்காவது சென்று விடலாம்” – என்றும் கூறுகிறது.

இப்பொழுது முடிவெடுக்க வேண்டியது புத்தி.

”கூட்டத்தை நோக்கிப் போகலாம்” என்று முடிவெடுத்தால் அதற்குரிய ஆர்வத்தை சித்தம் நமக்கு வழங்கிவிடும்.

”விலகிப் போகலாம்” என்று முடிவெடுத்தால் பயம் போன்ற உணர்ச்சியை ஏற்படுத்தி சித்தம் விழிப்படைய வைக்கும்.

முடிவில் என்ன உணர்ச்சி ஏற்படுகிறதோ, அந்த உணர்ச்சிக்குப் பெயர் அகங்காரம்.

இவ்வாறு சூழ்நிலைக்குத் தகுந்தவாறு நம்முடைய மனம் செயல்படுகிறது.

சில நேரங்களில் நாம் மேலே கூறியபடி மூன்று விதமான முடிவெடுக்க முடியாத சூழ்நிலையும் ஏற்படலாம்.

மனதை **Total Mind, Conscious Mind** என இரண்டு வகையாகப் பிரிக்கலாம்.

மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என நான்கும் மொத்தமாகச் சேர்ந்து, பிரித்துப் பார்க்க முடியாத அம்சத்தில் செயல்படுவது **Total Mind.**

பிரித்துப் பார்த்து செயல்படக்கூடிய அம்சங்கள் எல்லாம் **Conscious Mind.**

**Conscious Mind** செயல்படும்போது பிரச்சினை அதிகமாக இருக்கும். **Total Mind** செயல்படும்போது பிரச்சினை அவ்வளவாக இருக்காது.

உதாரணமாக நாம் ஒரு இருட்டுக்குள் நடந்து சென்று கொண்டிருக்கிறோம். பாதை சரியில்லாமல் கரடுமுரடாக உள்ளது. குண்டும் குழியுமாக உள்ளது. அதனால் நாம் எதிலாவது மோதி விடுவோமோ, கீழே விழுந்து விடுவோமோ என்று பலவிதத் தடுமாற்றமான சிந்தனைகளோடு செல்கிறோம். திடீரென நம்மை அறியாமல் இடறி ஏதோ ஓரிடத்தில் விழுந்து விடுகிறோம். இடறி விழுந்த உடன் மீண்டும் எழுவதற்கு நாம் இப்படி எழுவோமா, அப்படி எழுவோமா என சிந்திக்க மாட்டோம். சிந்திப்பதற்கு முன்னாலேயே எழுந்து விடுவோம். எழுந்த பிறகுதான் எப்படி எழுந்தோம் என்பதே தெரியும்.

இம்மாதிரியான இடங்களில் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என எதையும் பிரித்தறிய முடியாது. இதுதான் **Total Mind.** முழு ஆர்வத்துடன் எந்த ஒரு செயலையாவது செய்வோமானால், அங்கு முழு மனம்தான் செயல்படுகிறது. தேவை இல்லாததை நினைத்துக் கொண்டு குழம்புவதைதான் **Conscious Mind** என்கிறோம். **Conscious Mind** என்பதுகூட **Total Mind**–ல் உள்ள ஒரு சிறு பகுதி தான். இரண்டும் வேறு வேறு கிடையாது. ஆனால் **Conscious Mind** எப்பொழுதும் அலைபாய்ந்து கொண்டு இருக்கும். அது தேவையில்லாமல் அலை பாய்ந்து கொண்டு இருக்கிறதே என்று நாம் வருத்தம் அடையத் தேவையில்லை. செயலின் தன்மைக்கு ஏற்றபடி முழு மனமே செயல்பட்டுவிடும். எந்தச் செயல் செய்தாலும் முழு மனம்தான் செயலின் முக்கியமான பகுதியை எடுத்துக் கொள்கிறது. ஆனால், **Conscious Mind** தான் எப்பொழுதும்– 24 மணி நேரமும் செயல்பட்டுக் கொண்டிருப்பது போன்று உள்ளது. முழு மனம் என்பது ஒரு குறிப்பிட்ட நேரத்தில் தோன்றி உடனே மின்னல் மாதிரி மறைந்துவிடும். முழு மனம் சூழ்நிலையை நிர்வாகம் செய்வதற்கு வரும், செய்யவேண்டியதைச் செய்து விட்டு அது சென்றுவிடும்.

நம்முடைய செயல்களை நாம் செய்யும் போது **Total Mind** எப்படி வேலை செய்கிறது, **Conscious Mind** எப்படி வேலை செய்கிறது என்பதை நாம் புரிந்து கொண்டோம் என்றால், நம்முடைய செயல்களில் கூட தேவையில்லாத பொறுப்பு எடுத்து சுமக்க வேண்டிய அவசியம் இருக்காது. செய்ய வேண்டிய செயல்களை நாம் முடிவு செய்யலாம், ஆராய்ச்சி செய்யலாம், இருப்பினும் அதை நிறைவேற்றுவதற்கு அதிக பொறுப்பு எடுக்க வேண்டிய அவசியமில்லை.

ஏனென்றால் செயல்கள் அனைத்தும் முழு மனதைச் சார்ந்தது என்பதையும், அந்த முழுமனதையும் நாமாக இயக்கத் தேவையில்லை என்பதையும் புரிந்து கொண்டால் போதும்.

அப்படிப் புரிந்து கொண்டோம் என்றால், செயலுக்கான பொறுப்பைக் கூட முழு மனதிடம் ஒப்படைத்து விடலாம். தேவையில்லாமல் செயல்களைப் பற்றி அலட்டிக்கொள்ளத் தேவையில்லை.

என்ன செயல்கள் செய்வது என்று ஆலோசனை செய்யலாம், அது தவறில்லை. இருப்பினும் ஆலோசனை செயலாக மாறாது. ஆனால் செயல்பட வேண்டிய நேரத்தில் முழுமனம் அதுவாக செயல்படும். ஆனால் எந்த அளவுக்கு முழு மனதிடம் பொறுப்பை நாம் ஒப்படைக்கிறோமோ, அந்த அளவுக்கு செயல்களும் அதாவது புறச் சூழ்நிலைகளும்

தேவையில்லாத அழுத்தத்தை நமக்குக் கொடுக்காது.

எல்லாவற்றையும் நாம் தான் சுமக்க வேண்டும் என்று பொறுப்பெடுத்துக் கொள்ளும் போது, அதுவும் ஒரு அழுத்தத்தைக் கொடுத்து எதிரொலிக்க ஆரம்பித்து விடும்.

அகத்தைப் பொருத்தளவில் ஒன்றும் செய்யத் தேவையில்லை. எந்த நிலையையும் தக்க வைக்கத் தேவையில்லை என்று முடிவு செய்து விட்டோம். அதேபோல் புறத்தைப் பொறுத்த அளவில் மேலே கூறியவாறு முடிவெடுத்து விட்டோம் என்றால் புறச் செயல்களும் எளிதாக இருக்கும்.

நம்மால் செய்ய முடிந்ததைச் செய்யலாம், செய்ய முடியாததும் இருக்கும். சில செயல்கள் எதிர்காலத்தில் செய்யக்கூடியதாக இருக்கும். அதற்குரிய சூழ்நிலை இப்பொழுது இருக்காது. ஆனால் அது இப்படி ஆகி விடுமோ, அப்படி ஆகி விடுமோ என தேவையில்லாமல் நாம் குழம்பத் தேவையில்லை. தேவையில்லாத எண்ணங்கள் வரத்தான் செய்யும். எப்பொழுது நமக்கு செயலுக்கான சூழ்நிலை வருகிறதோ, அதை முழுமனமே பார்த்துக்கொள்ளும் என்று முடிவுக்கு வந்து விட்டோம் என்றால், சூழ்நிலையைக் கண்டு நாம் பயப்பட வேண்டிய அவசியமில்லை. சூழ்நிலையின் தாக்கம் குறைவாக இருக்கும். புறத்தைப் பொறுத்த அளவில் பொறுப்பாகச் செயல்பட வேண்டும். அவ்வாறு பொறுப்பாகச் செயல்படுவதற்கு உரிய பகுதி நம்மிடம் உள்ளது என்பதைப் புரிந்து கொண்டு அதற்கு அங்கீகாரம் அளிக்கும் போது அனைத்தும் நமக்கு இலகுவாக இருக்கும்.

உத்தங்கர் என்று ஒரு முனிவர். அவருக்கு கிருஷ்ணர் ஒரு வரம் அளிக்கிறார். உத்தங்கர் ஒரு சன்னியாசி. "எனக்கு தேவைகள் அதிகமாக இல்லை. நான் காடுகளுக்கு தவமிருக்க செல்லும் போது சில இடத்தில் எனக்கு தண்ணீர் கிடைக்காது. அந்த நேரத்தில் எனக்கு தண்ணீர் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்தால் மட்டும் போதும்," என்று கேட்கிறார்.

உடனே கிருஷ்ணரும்," இது சாதாரண விஷயம் தானே, பெரியதாக ஏதாவது கேள்" என்று கூறுகிறார்.

அதற்கு உத்தங்கர் "எனக்கு இதுவே போதும்" என்கிறார்.

ஒரு சூழ்நிலையில் உத்தங்கர் பாலைவனத்தில் பயணம் செய்து கொண்டிருக்கும் போது, தண்ணீரை எங்கெல்லாமோ தேடிப் பார்க்கிறார். ஆனால் கிடைக்கவில்லை. உடனே கிருஷ்ணரை நினைக்கிறார். கிருஷ்ணர் உடனே இவர் சாதாரண தண்ணீரைக் கேட்கிறார், இவருக்கு நாம் அமிர்தத்தைக் கொடுப்போம் என்று இந்திரனைக் கூப்பிட்டு கொடுக்கச் சொல்கிறார்.

இந்திரனோ, "மனிதர்களுக்கு எல்லாம் அமிர்தத்தைக் கொடுக்க முடியாது. அது தேவர்களுக்கு மட்டுமே உரியது" என்கிறார்.

"இல்லை, இவர் ஒரு சராசரி மனிதரல்லர். இவர் ஒரு தவ சிரேஷ்டர். அதனால் இவருக்குத் தயங்காமல் கொடுக்கலாம்" என கிருஷ்ணர் வற்புறுத்துகிறார். உடனே இந்திரனும், "நான் அவருக்கு அமிர்தம் என்று சொல்லிக் கொடுக்க மாட்டேன். மறைமுகமாகக் கொடுக்கிறேன். அவர் சாமர்த்தியம் இருந்தால் என்னிடம் வாங்கிக் கொள்ளட்டும்" என்று கூறுகிறார். கிருஷ்ணரும் அதற்கு சம்மதிக்கிறார்.

இந்திரன் புலையன் போன்று வேடமிட்டு நான்கு வேட்டை நாய்களைக் கையில் பிடித்துக்கொண்டு தோலினாலான ஒரு பையில் அமிர்தத்தை எடுத்து கொண்டு செல்கிறார். அது கீழே ஒழுகி கொண்டு உள்ளது. அதில் ஈயும் மொய்த்துக் கொண்டிருந்தது. அந்தக்கோலத்தில் இந்திரன் உத்தங்கரைப் பார்த்து, "சாமி, தாங்கள் தாகமாக இருப்பதைப் போன்று உள்ளது. தங்களுக்கு தண்ணீர் வேண்டுமா?" எனக் கேட்கிறார். இந்திரனின் தோற்றத்தைப் பார்த்த உத்தங்கர் அருவருப்படைகிறார்.

"உன்னிடம் தண்ணீர் வாங்கி அருந்துவதற்கு நான் தாகத்திலேயே செத்துப் போய்விடலாம்", என்று கூறி மறுத்து விடுகிறார்.

உடனே இந்திரனும் அவ்விடத்தை விட்டு மறைந்து விடுகிறார். உத்தங்கர் கிருஷ்ணரை நினைத்து, "தண்ணீர் கேட்டதற்கு என்னை இந்த அளவுக்கு கஷ்டப்படுத்துகிறாயே? இப்படி ஒருவரிடமா தண்ணீர் கொடுத்து அனுப்புவது ?" என்று கேட்கிறார்.

உடனே கிருஷ்ணரும், "அமிர்தத்தை அனுப்பினேன். நீ உன்னுடைய அறியாமையினால் அதனை விட்டு விட்டாய். இருந்தாலும் பரவாயில்லை. அடுத்து உனக்காகவே நான் ஒரு மேகத்தை உருவாக்குகிறேன். அதற்கு உத்தங்க மேகம் என்று பெயர். நீ எங்கு சென்றாலும் உன் பின்னால் அது வந்து கொண்டே இருக்கும். உனக்கு எப்பொழுது தண்ணீர் தேவை என்றாலும், அம்மேகத்திலிருந்து நேரடியாகவே தண்ணீர் வந்து விடும்" என மற்றுமொரு வரம் அளிக்கிறார்.

இதேபோன்று, நமக்கு நிறைய பிரச்சினைகள் உள்ளன. பிரச்சினைகள் எல்லாம் ஏதோ ஒரு நல்வழியைக் காட்டுவதற்காகத்தான் மோசமான சூழ்நிலையாக வருகிறது என்று எடுத்துக்கொண்டோம் என்றால் அதையும் நம்முடைய முழு மனம் பார்த்துக் கொள்ளும்.

சூழ்நிலை பிரச்சினையான சூழ்நிலைதான். இருப்பினும் அது நமக்கு நன்மைக்காகத்தான் வந்துள்ளது என எடுத்துக் கொள்ள வேண்டும்.

இதே மாதிரி ஒரு பெரிய பணக்காரன். அவனுக்கு ஒரு மகன். அவன் ஒரு ஊதாரி. சொத்துக்களையெல்லாம் விற்று தேவையில்லாமல் செலவு செய்கிறான். அவருடைய தந்தை எவ்வளவோ சொல்கிறார். அவன் திருந்தவில்லை. நிறைய கெட்ட பழக்கங்களும் அவனுக்கு உண்டு.

”தம்பி நீ செல்லும் பாதையும் சரி இல்லை ; உன்னுடைய சேர்க்கையும் சரியில்லை. இருந்தாலும் உனக்கு ஒரு அறிவுரை சொல்கிறேன். உனக்கு எப்பொழுதாவது வாழ்க்கையே வெறுத்துப் போனது போன்ற சூழ்நிலை ஏற்பட்டால், நான் வைத்திருக்கும் இந்தத் தனி அறையைத் திறந்து பார். உனக்கு வேண்டிய கடைசியான சில ஏற்பாடுகளை அங்கு செய்து வைத்துள்ளேன்,” என்று கூறுகிறார்.

சிறிது காலத்தில் தந்தையும் இறந்துவிடுகிறார். மகன் தந்தை கூறியதை ஒன்றும் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை.

மேலும் அவன் இருக்கும் சொத்துக்களை எல்லாம் அழித்தான். கடன் தலைக்கு மேல் ஏறி விட்டது . அதனால் அவன் மனம் வெறுத்து இனிமேல் நாம் உயிர் வாழ்வதில் அர்த்தமில்லை; நாம் செத்துப் போய்விடலாம் என தற்கொலை செய்துகொள்ள முடிவெடுக்கிறான்.

அப்பொழுது அவனுடைய தந்தை கூறியது அவனுக்கு நினைவிற்கு வருகிறது. உடனே தந்தை கூறியதை நினைத்து அறையைத் திறந்து பார்க்கிறான். அறையில் கடிதம் ஒன்றை எழுதி வைத்துள்ளார்.

”உன்னுடைய பாதை சரியில்லை. நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். நீயும் திருந்துகிற மாதிரி தெரியவில்லை. இருந்தாலும் நாமெல்லாம் கௌரவமாக வாழ்ந்தவர்கள். நாம் ஒருபோதும் கடன்காரர்களால் அசிங்கப்பட்டு சாகக்கூடாது...

நமது குடும்ப கௌரவம் தான் முக்கியம். ஆகவே தற்கொலை செய்து கொண்டு செத்துப் போய்விடலாம். அதனால் உனக்கு பக்கத்து அறையில் ஒரு தூக்கு கயிறு ஒன்றை மாட்டி வைத்து இருக்கிறேன். நீ அதில் தொங்கி உனது வாழ்வை முடித்துக் கொள்ளலாம்” என்று கடிதம் எழுதி வைத்துள்ளார்.

இவனும் தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் தான் இருந்தான். அவனுடைய தந்தையும் அதைத்தான் எழுதி வைத்துள்ளார்.

சரி நாம் கௌரவமாக இறந்து போய் விடுவோம் என முடிவு செய்து அந்த தூக்குக் கயிறிலேயே தொங்குகிறான்.

அந்த தூக்குக் கயிறு வேறு ஏதோ ஒன்றில் மாட்டிக் கொண்டுள்ளது. உடனே அது கழன்று அங்கிருந்து செல்வமாகக் கொட்டுகிறது.

மறுபடியும் அவன் பணக்காரன் ஆகி விடுகிறான்.

இதில் என்னவென்றால் கஷ்டமான சூழ்நிலையில் கூட, நமக்கு ஏதோ ஒரு மறைக்கப்பட்ட நன்மையும் புதைந்திருக்கிறது என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்.

புறச்செயல்களுக்கு உதவியாக இம்மாதிரியான அணுகுமுறைகளை நாம் வைத்துக் கொள்ளலாம். சில முடிவுகள் எடுக்கும்போது புற செயல்களை எதிர்கொள்வதற்கு சரியாக இருக்கும். அகத்தைப் பொருத்த அளவில் அங்கு செய்வதற்கு ஒன்றுமே இல்லை.

அகம், புறம் என பிரிக்காமல் கூட பலர் நன்றாக செயல்படக் கூடியவர்களாக இருக்கிறார்கள். ஆனால் சிலருக்கு சூழ்நிலையின் அழுத்தம் தாங்க முடியாமல் பிரச்சினைகளில் மாட்டிக்கொள்ள வேண்டிய நிலையும் உள்ளது.

அவர்களுடைய புரிதல் கூட கேள்விக்குறியாகும் அளவிற்கு ஆகிவிடுகிறது.

புறச் சூழ்நிலைகளை நாம் நன்றாக அணுகுவதற்கு மேலே கூறியவாறு சில முடிவுகளை எடுப்பது உதவியாக இருக்கும். புறச் சூழ்நிலையை முழு மனம் பார்த்துக்கொள்ளும் என முடிவு செய்து கொள்ளலாம். இல்லையென்றால் நாம் செய்ய வேண்டியது என்ன, செய்ய வேண்டாதது என்ன எனவும் முடிவெடுத்துக் கொள்ளலாம். அல்லது அதைத் தள்ளிப் போடலாம் என்றும் முடிவெடுத்துக் கொள்ளலாம்.

இல்லை **நமக்கு வரக்கூடிய துன்பங்கள் அனைத்தும் நன்மைக்காகத்தான் வந்துள்ளன** எனவும் எடுத்துக்கொள்ளலாம்.

நிறைய கஷ்டமான சூழ்நிலை கூட நமக்கு நல்லதாக அமைய வாய்ப்பிருக்குகிறது. எல்லாமே ஒரு நல்ல விஷயத்தை உள்ளடக்கிய மோசமான அம்சமாக இருக்கிறது என்ற வகையில் எடுத்துக்கொண்டு சூழ்நிலையை நிர்வாகம் செய்யலாம்.

அவ்வாறு நிர்வாகம் செய்யும் போது, நமது செயல்கள் அனைத்தையும் நாம் மனமுவந்து செய்வதாக அமையும்.

செயலில் முழுமனதுடன் ஈடுபடும் போது, நாம் வேறு, அந்தச் செயல் வேறு என்றில்லாமல், நமது செயலே ஒரு தியானமாக மாறிவிடும்.

ஒருங்கிணைந்த ஒரு வாழ்க்கை அமைவதற்கும் அது உதவும். ★



V.A.P. சரவணன்
செல் : 99942 05880

# கேள்வி பதில்...

**கேள்வி : ஞானம் அடைந்த பிறகு நமக்குள் ஏற்படும் மாற்றங்கள் என்ன?**

**பதில் :** ஞானத் தேடுதலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கக்கூடிய ஒவ்வொரு சாதகனுக்குமான பொதுவான கேள்வியாகவே இது இருக்கும்.

இந்தக் கேள்விக்கான விடையை நாம் மூன்று பகுதிகளாக பிரித்து புரிந்து கொள்வோம்.

1) ஞானம் அடைவதற்கு முன் நாம் எப்படிப்பட்ட மனநிலையில் இருந்தோம்?

2) ஞானம் என்று நாம் மனதளவில் எதைப் புரிந்து கொள்கிறோம்?

3) புரிந்து கொண்ட பிறகு நாம் சந்திக்கும் நிகழ்வுகளை நாம் எப்படிப் பார்க்கின்றோம்?

இந்த மூன்று நிலைகளையும் எப்படி நாம் கடந்து வருகிறோம் என்பதை ஓர் அளவீடாக எடுத்துக்கொள்ளலாம்.

அந்த அளவீட்டில் நான் என்னை எவ்வாறு பொருத்திப் பார்த்தேன் என்பதைதான் இங்கு பதிவு செய்ய விரும்புகிறேன்.

**புரிதலுக்கு முன் என் மனநிலை :**

என்னுடைய 14 வயது வரை, அதாவது நான் சிறுவனாக வளர்ந்து வந்த வரை எனக்கு எந்தப் பிரச்சனையும் பெரிதாக இல்லை.

அதன் பிறகு மனதில் எதிர்மறை எண்ணங்கள் புதியதாகத் தோன்ற ஆரம்பித்தன. எனக்கு இப்படி மனதில் எதிர்மறை எண்ணம் தோன்றுகிறது என்பதை கூட என் பெற்றோரிடமும், மற்றவர்களிடமும் யாரிடமும் தெரிவிப்பதற்கு நான் விரும்பவில்லை. காரணம்

"நான் சரியில்லை" என்ற எண்ணம் இதற்குத் தடையாக இருந்தது.

'நண்பர்கள் எல்லோரும் உற்சாகமாக மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். நான் மட்டும் ஏன் இப்படி சரியில்லாமல் இருக்கிறேன்' என்ற எண்ணம் மட்டுமே எனக்குள் மேலோங்கி இருந்தது.

அந்த வயது பதின் பருவம் (Teenage) என்பதால் பாலுணர்வு சுரப்பிகள் செயல்பட தொடங்கிய காலம். எதிர் பாலினத்தின் மீது ஆர்வம் இயற்கையாக ஏற்பட்டது.

மற்றவர்கள் மீது தப்புத்தப்பாக எனக்கு எண்ணம் வருவது பிடிக்கவில்லை.

காரணம், அவர்கள் வயதில் என்னை விட மூத்தவர்கள். உறவுகளில் மதிக்கப்பட வேண்டியவர்கள்.

இப்படி பல எதிர்மறை எண்ணங்களின் காரணமாக இறுதியாக "நான் சரியில்லை" என்ற முடிவுக்கு நான் வருகிறேன்.

மனதை சரி செய்வதற்கான ஒரே இடம் ஆன்மிகம்தான் என்று ஆன்மிகத்தின் பக்கம் திரும்பினேன்.

ஆன்மிகத்தில் உயர்ந்த நிலையில் இருப்பவர்களை பார்க்கும் பொழுது அவர்களை ஒரு மலையைப் போலவும் நாம் எதற்கும் உபயோகப்படாத ஒரு கேவலமான பொருளாக இருப்பதாகவும் என்னை நானே எண்ணிக் கொள்ளும் மனநிலையில்தான் நான் இருந்தேன்.

நம்மை நாமே தாழ்த்திக் கொள்ளும் மனநிலைதான் எனக்கு மேலோங்கி இருந்தது.

இதனால், என்னால் எந்த செயலையும் ஒரு நிறைவாகச் செய்ய முடியாத மனநிலையில்தான் இருந்தேன்.

சரி இல்லாத என்னுடைய மனதை, சரி செய்வதன் பொருட்டு தியானத்தில் தீவிரமாக ஈடுபட தொடங்கினேன்.

மனதிற்கு கொடுக்கப்பட்ட எல்லாவிதமான பயிற்சி முயற்சிகளையும் மேற்கொண்டு வந்தேன். எல்லாப் பயிற்சி முயற்சிகளும் ஓரளவுக்கு உதவி செய்தன. ஆனால் நிரந்தர தீர்வு கிடைக்கவில்லை.

மனதில் ஒரு பக்கம் பயிற்சி, முயற்சிகள் தீவிரமடைந்தன. அதே நேரம் மனதின் மறுபக்கம் அமைதியற்ற மனநிலையே மேலோங்கி இருந்தது.

ஆன்மிகத்தில் எல்லாப் பயிற்சி முயற்சிகளையும் எடுத்து களைத்தேன்.

புரிதலுக்கு முன் இப்படித் தான் இருந்தேன்.

**ஞானப் புரிதல் என்று எதை புரிந்து கொண்டேன் என்பதை பார்ப்போம்.**

ஸ்ரீபகவத் ஐயா வழங்கும் புரிதலை முதன்முறையாக தெரிந்துகொள்கிறோம்.

மனதில் எல்லாமே தாமாகத் தோன்றுகிறது. தோன்றிய அனைத்தும் தாமாகவே மறைந்து விடுகிறது.

இந்த இயக்கத்தில் நமக்கு எந்த ஒரு வேலையும் இல்லை.

என்னுடைய கேள்விகள் பல்வேறு விதமாக இருந்தபோதிலும் அனைத்து கேள்விகளுக்கும் ஒரே பதிலையே விடையாகத் தருகிறார் ஸ்ரீ பகவத் ஐயா.

அனைத்து கேள்விகளுக்குமான ஒரே விடையான புரிதலை முழுமையாக விசுவாசிக்க தொடங்கினேன். **"தானா வருது, தானா போகுது நமக்கு எந்த வேலையும் இல்ல பாரு"**

– மேற்சொன்னவாறு ஐந்தாறு மாதங்கள் தீவிரமாக விசுவாசித்த பிறகு,

நமக்கு வருகிற எண்ணம் நம்முடைய முயற்சியின்றி தாமாக வருவது. எண்ணத்தில் நமக்கு யாதொரு வேலையும் இல்லை. நமது மன இயக்கம் நமக்கு கட்டுப்பட்டது கிடையாது. ஒட்டுமொத்த மனோ இயக்கமுமே தோன்றி மறைய கூடிய ஓர் இயக்கம் என்பதை தெளிவாகப் புரிந்து கொண்டேன்.

இதுதான் மனதின் இயக்கத்தை பற்றி நான் புரிந்து கொண்ட புரிதல்.

**புரிந்து கொண்ட பிறகு என் மனநிலையை நான் எப்படி பார்த்தேன் என்பதை இனி பார்ப்போம்.**

எனக்கு தோன்றுகிற எதிர்மறை எண்ணத்தை நான் மாற்ற வேண்டும் என்ற முயற்சியிலிருந்து விடுபட்டேன்.

எனக்கு தப்புத்தப்பாகத் தோன்றும் எண்ணங்களை "சீரமைக்க வேண்டும்", "சரி செய்ய வேண்டும்" என்ற எண்ணப் பிடியில் இருந்து விடுபடுகிறேன்.

ஒரு சில தீய பழக்கங்களை மாற்றியே தீர வேண்டும் என்ற தீவிர மனமுயற்சியில் இருந்து விடுபட்டேன்.

மனோ இயக்கம் நமக்கு கட்டுப்பட்டது இல்லை என்பதை மட்டும் மிக தெளிவாகவும் உறுதியாகவும் புரிந்து கொண்டேன்.

நமக்கு நேரடியாக தெரிந்து, எந்த மன அனுபவத்தையும் நம்மால் ஒருபோதும் வெற்றி கொள்ள முடியாது என்பதைப் புரிந்து கொண்டேன்.

நாம் வெற்றி கொள்ள வேண்டும் என்று நினைப்பதுதான் அந்த அனுபவத்தை இறுகப் பற்றி பிடித்துக் கொள்வதேயாகும் என்பதை புரிந்து கொண்டேன்.

நமக்கு நேரடியாகத் தெரிந்து எந்த ஓர் எண்ணமும் உணர்வும் அனுபவமும் நம்மை விட்டு போவதற்கு வாய்ப்பே இல்லை.

நமக்கு தெரியாமல் வந்த எண்ணமும் உணர்வும் அனுபவமும் நமக்கு தெரியாமல் மட்டுமே நம்மை விட்டுப் போக முடியும். நமக்குத் தெரிந்து போவதற்கு வாய்ப்பே இல்லை என்பதுதான் நான் எனக்குள் கண்டுபிடித்தேன்.

என்னுடைய கார் டிரைவிங் அனுபவத்தில் நான் எதிர்கொண்ட எதிர்மறை எண்ணங்களை புறக்கணித்து சிறப்பாக கார் ஓட்டும் நிலைக்கு மூன்று மாதங்களில் மாறினேன்.

இதனால் புரிதலின் மீது எனக்கு ஒரு நம்பிக்கை ஏற்பட்டது.

தீயப் பழக்கங்களில் இருந்த தீவிரம் முன்பை விட இப்போது குறைந்து கொண்டே வருவதை அனுபவபூர்வமாக உணர்கிறேன்.

இதற்கு முன்பு எனக்கு மகிழ்ச்சியை அளித்த பொருட்கள், அனுபவங்கள் இப்பொழுது மகிழ்ச்சியை தரவில்லை. அந்தப் பொருட்கள் தேவைக்கு மிகுதியாக இருந்த போதும் மகிழ்ச்சியைத் தரவில்லை.

அப்படியெனில் என்னிடம் ஏதோ ஒரு மாற்றம் நிகழ்ந்து இருக்கிறது என்பதுதான் உண்மை.

நான் சந்திக்கும் எல்லா விதமான சூழ்நிலைகளிலும் எனக்கு ஏற்படும் மனோரீதியான எண்ண உணர்வுகள், அனுபவங்களில் இருந்தும் முன்பைக் காட்டிலும் ஒரு மாற்றமும் நிதானமும் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது.

இறுதியாக ஒன்றே ஒன்றுதான் தொடர்ந்து மாறிக்கொண்டே இருந்து வந்திருக்கிறது என்பதை புரிந்து கொண்டேன்.

அது எல்லாவற்றிற்கும் ஆதாரமான எண்ணம்தான், அதுவேதான் நாம் உணரும் மனமாகவும், மனோ அனுபவமாகவும், அதை உணரும் அனுபவிப்பவனாகவும், புலன் அனுபவமாகவும், எல்லாமாகவும் மாறிக்கொண்டே இருக்கிறது.

எல்லாம் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டேயிருக்கிறது என்பதை இறுதியாக விளங்கிக் கொண்டேன்.

இதுவே நான் புரிந்துகொண்ட புரிதல்.

புரிந்து கொண்ட பிறகும் கூட எல்லா விதமான எண்ணங்களும், உணர்வுகளும் அனுபவங்கள் வந்து கொண்டுதான் இருக்கின்றன.

அவை நிரந்தரமற்றவை, தோன்றி மறையக்கூடியவை, நமக்கு கட்டுப்பட்டவையல்ல என நான் புரிந்து கொண்ட நிலையில் அதன் தீவிரமும் தாக்கமும் மறைவதை உணர்கிறேன். எந்த எண்ணமும் உணர்வும் அனுபவமும் தொடர்ந்து நீடிக்காமல் தோன்றி மறைகின்ற தன்மையில் இருப்பதை உணர்கிறேன். இதுவே எனது புரிதலின் சாரம்.

இதுவே புரிதலால் எனக்குள் நிகழ்ந்த மாற்றம்.



# ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

ஞானியர் அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

குழந்தைகளின் குதூகலமும் கொண்டாட்டமும் அவர்கள் பெரியவர்களானதும் இறுகிய முகங்களாகவும் இன்னல்கள் கொண்ட மனங்களாகவும் மாறிவிடுகின்றன.

ஏன் இந்த மாற்றம்? யார் இதற்கு காரணம்?

கள்ளங் கபடமற்ற நிலை என்பது நமது இயற்கையான நிலை. குழந்தை பருவத்தில் உள்ளத்தில் துன்பங்கள் நிலைப்பதில்லை, வஞ்சமும் வாழ்வதில்லை.

அது தெய்வீகமாகவே உள்ளது.

அறிவின் வளர்ச்சி விரிய விரிய அகத்தையும் நிர்வகிக்க முயல்கிறது. அகத்திலும் ஒவ்வொன்றாக குடி கொள்ள ஆரம்பிக்கிறது.

அப்படி எனில் அறிவின் வளர்ச்சி ஆபத்தானதா!?...

அப்படி அல்ல. அறிவு அகத்தை நிர்வகிப்பதுதான் ஆபத்தானது.

அறிவும் அகத்தின் (மனதின்) ஒரு பகுதிதான். அது புறத்தே நிர்வாகம் செய்யும் வரை நமது வாழ்வு உயரும். அது அகத்தை நிர்வாகம் செய்யும் போதுதான் ஆபத்தானதாக மாறிவிடுகிறது.

அறிவு நிர்வகிக்கும் மனம் முடிவுக்கு வராத ஒரு போராட்டக்களமே.

மீண்டும் நம் மனம் கள்ளங்கபடமற்ற மனமாக மாறுமா?

மீண்டும் தெய்வீகமாக... குழந்தை மனமாக மாறுமா?

இது சாத்தியமா?

சாத்தியம் என்பதே சத்தியம். இதுவே ஆன்மிகத்தின் உச்சமான முக்தி என்று சொல்லக்கூடிய அக-விடுதலை.

அதை வழங்கும் புரிதலே மெஞ்ஞானம்.

சென்ற ஜனவரி மாத இதழில் 'இக்கணமே ஞானம்' என்ற தலைப்பில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் உரையை ஒரு கட்டுரையாக வெளியிட்டிருந்தோம். அதன் தொடர்ச்சியாக இம்மாதம் ஐயா அவர்களின் 'அகம்-புறம்' உரையை ஒரு கட்டுரையாக வெளியிட்டுள்ளோம்.

இவ்விரண்டு கட்டுரைகளும் நம் அகத்தையும் புறத்தையும் முழுமையாக்கி விடுகின்றன.

இதுவரை ஆன்மிக வாழ்வு, உலகியல் வாழ்வு என இரு வேறு பகுதிகளாக இருந்து வந்த நமது வாழ்வை, ஐயா வழங்கும் மெய்ஞானத்தால் இவ்விரண்டும் இணைந்த ஒரு முழுமையான வாழ்வாக நமது வாழ்வு மாறிவிடுகிறது.

இதுவே சரியான வாழ்வாகும்.

ஐயாவின் அணுகுமுறையால் மட்டுமே இது சாத்தியமாகிறது.

சென்ற டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற ஞான முகாமை தொடர்ந்து வருகின்ற பிப்ரவரி 25-ஆம் தேதி முதல் 27-ஆம் தேதி வரை சேலம் ஸ்ரீ பகவத் பவனில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் நடைபெற உள்ளது. இதன் விபரம் இம்மாத இதழில் கொடுக்கப்பட்டுள்ளது. இதனை அனைவருக்கும் தெரிவித்து அனைவரையும் பயன் பெறச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**புரிதலை பகிர்வோம்! புனிதமாக பிரவகிப்போம்!!**




# "அறிவை கழட்டி வை"

அது ஓர் எளிமையான ஞானியின் ஆசிரமம். அங்கு வரும் பலரும் ஞானியை நேரடியாக சந்தித்து ஞானவிசாரணையை மேற்கொண்டு மனத் தெளிவுடன் விடை பெற்று செல்வது வழக்கம்.

அன்றும் வழக்கம் போல் தேடுதல் கொண்ட பல அன்பர்கள் ஞானியிடம் சத்சங்கத்தில் ஈடுபட்டனர்.

வந்திருந்த சத்சங்க நபர்களில் ஒருவர், பல வருடங்களாக ஞானத்தேடுதலுக்காகவே தன்

வாழ்வை அர்ப்பணித்து இருந்தவர். பல வருடங்களாக பயிற்சிகளிலும் முயற்சிகளிலும் தீவிரமாக ஈடுபடுபவர்.

அங்கு வந்துள்ள பல அன்பர்களை காட்டிலும், தான் ஆன்மிகத்தில் உயர்ந்த நிலையில் இருப்பதாக தனக்குள் நினைத்துக்கொண்டார்.

இப்படி அவர் தனக்குள் நினைத்துக் கொண்டு இருப்பதே, சத்சங்கத்திற்கு வந்திருந்த மற்றவர்களிடம் சகஜமாக பேசுவதற்கும் எளிமையாக பழகுவதற்கும் சாதாரணமாக நடந்து கொள்வதற்கும் மிகவும் தடையாக இருந்தது.

ஞானியுடன் சத்சங்க விசாரணையில் ஈடுபடும் பொழுது, மற்றவர்களை காட்டிலும் இவர் கேள்வி கேட்கும் விதம், தனது கருத்துகளை தெரிவிக்கும் அணுகுமுறை என எல்லாமே அந்த சத்சங்க கூட்டத்தில் அவரைத் தனிமைப்படுத்தியும் வேறுபடுத்தியும் காட்டியது.

சத்சங்கத்திற்கு வந்திருந்த அனைவரும் ஒரு கூட்டமாகவும் இவர் மட்டும் அதிலிருந்து தனித்து வேறுபட்ட ஒரு நபராகவும் காட்சி அளித்தார்.

அந்த ஞானியும் ”உங்களுக்கு ஏதேனும் தனிப்பட்ட கருத்துக்கள், விளக்கங்கள் தெரிந்துகொள்ள வேண்டியது இருந்தால் என்னை தனிப்பட்ட முறையில் நேரில் அணுகி தெளிவு பெற்றுக்கொள்ளவும்” என்று கூறினார்.

அன்பர்கள் பலரும் சகஜமாகப் பழகிய போதும் அவரால் தன் மன நிலையிலிருந்து தன் அறிவின் பிடியில் இருந்து விடுபட முடியாமல் மிகவும் அவதியுற்று இருந்தார்.

சத்சங்கத்தின் முடிவில், ஞானி தான் உணர்ந்த உண்மையை எடுத்துரைத்தார்.

”அறிவின் பிடியில் இருந்து மனம் விடுதலை பெறுவதே விடுதலை. அகத்தளவில் அறிவு தன்னை இழந்த நலனே பூரணம். தன்னை இழந்த நிலையில், தானே பூரணமாக மாறிவிடுகிறோம்” என்பதை ஞானி அழகாக பல எளிய உதாரணங்களுடன் எல்லோருக்கும் புரியும்படி விளக்கினார்.

அந்த அன்பருக்கு ஏதோ புரிந்தும் புரியாததுபோல் இருந்தது. ஞானியிடம் தயங்கி வந்து தனிமையில் கேட்டார்.

”என்னால் மற்றவர்களிடம் சகஜமாக பழக முடியவில்லை. ஏதோ எனக்குள் தடுக்கிறது. இதிலிருந்து விடுபட நீங்கள்தான் உதவ வேண்டும்.”

ஞானி, அந்த அன்பரை கூர்ந்து கவனிவிட்டு புன்முருவலுடன் ”அகத்தில் முரண்படும் உன் அறிவை கழட்டி வை” என்றார்.

அந்த வார்த்தை அவருக்குள் ஞானத்தை வழங்கியது.

அறிவின் இறுக்கத்துடன் ஞானியின் விசாரணைக்கு வந்த அந்த அன்பர் இதனை நன்கு புரிந்து கொண்டார். அடுத்தடுத்த தினங்களில் நான் என்ற அறிவு தன்னை இழந்து இறுக்கம் தளர்ந்த நிலையில் எல்லோரிடமும் உரிமையுடன் சகஜமாக பல விஷயங்களை பேசும் நிலைக்கு மாறினார்.

அவரின் பல நாள் அறிவின் இறுக்கம் அந்த ஞானியின் சந்நிதியில் உடைந்தது. தான் இவ்வளவு நாட்களாக சுமந்து கொண்டிருந்த அறிவை வைத்து மனதை ஒன்றும் செய்ய முடியாது என்பதை தன்னுள் விளங்கிக்கொண்டார்.

தனது அறிவு புறச் செயல்களை நேர்த்தியாக செய்வதற்கு மிகவும் உதவும் என்பதை புரிந்து கொண்டார்.

அதே அறிவுதான் மனதை தன்னுடைய கட்டுப்பாட்டுக்குள்வைத்துக்கொள்ள வேண்டும் என்றும் தன்னை தனிமைப்படுத்தி எல்லோரிடமும் எளிமையாக பழக முடியாத வண்ணம் இறுக்கத்தை ஏற்படுத்தி உள்ளது என்பதையும் விளங்கிக்கொண்டார்.

அவரின் பல நாள் அறிவின் இறுக்கம் அந்த ஞானியின் சந்நிதியில் உடைந்தது.

கடலின் ஒரு சிறு அசைவு தான் அலை. பூரணத்தில் ஏற்படும் தற்காலிக சலனமே இந்த நான் என்ற தோற்றம். நீர்க்குமிழி தோன்றுவதும் மறைவதும் நீரிலே. அதுபோல் நான் என்ற உணர்வும் தோன்றி தோன்றி மறைவது இந்த பூரணத்தில்தான். இவ்வளவு நாட்களாக தான் சுமந்து கொண்டிருந்த அறிவை வைத்து மனதை ஒன்றும் செய்ய முடியாது என்பதை தன்னுள் விளங்கிக்கொண்டார்.

தான் இவ்வளவு நாட்களாக சுமந்து கொண்டிருந்த அறிவுப் பிடியை கழட்டி வைத்துவிட்டு மன விடுதலை அடைந்தார் .

அந்த சத்சங்கத்தில் கலந்து கொண்ட எல்லா அன்பர்களும் அவரின் மாற்றத்தைக் கண்டு பூரித்துப் போனார்கள்.

மனத்தெளிவு பெற்ற ஒரு மெய்ஞானியால் மட்டுமே தேடுதல் மனநிலையில் உள்ள எவரையும் எந்த நிலையில் இருந்தாலும் அவர்களை அவர்கள் இருக்கும் நிலையிலிருந்து மேல்நிலைக்கு அழைத்துச் செல்ல முடியும்.

உண்மையை உணர்ந்த ஞானியின் சந்நிதானத்தில் மட்டுமே இப்படி நிகழவும் முடியும்.

அகத்தில் அறிவை கழட்டி வைத்துவிட்டு குழந்தைகளாகவே மாறி ஆனந்தமாக வாழ்வோம்.

அறிவை பயன்படுத்தி புறத்தில் தியானமாகச் செயல்களைக் கர்மயோகமாக செய்வோம்.



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2021-2023
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555

# நிகழ்ச்சி நிழல்கள்









